# திருப்புகழமிர்தம்






ஆசிரியர்

## கிருபானந்தவாரி

கீலக

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

தை

# எமது வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. | 6-00 |
| 2. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. | 1-00 |
| 3. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும் முதற் படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. | 2-50 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு திருச்செந்தூர்) | ரூ. | 5-00 |
| 5. | திருப்புகழ் விரிவுரை-மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு-பழநி) | ரூ. | 5-00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை-நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு-சுவாமிமலே) | ரூ. | 2-50 |
| 7. | திருப்புகழ் விரிவுரை-ஐந்தாம் தொகுதி (குன்றுதோருடல் முதற்பாகம்) | ரூ. | 5-00 |
| 8. | திருப்புகழ் விரிவுரை-ஆறும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலேயும்) | ரூ. | 5-00 |
| 9. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. | 3-00 |
| 10. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. | 2-00 |
| 11. | திருவகுப்பு, கந்தரந்தாதி (உரையுடன்) கந்தரலங்காரம், கந்தரநுபூதி, வேல் விருத்தம் மயில் விருத்தம் (இவை முழுவதும்] | ரூ. | 1-50 |
| 12. | மகாபாரதம்; வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. | 4-00 |
| 13. | ஸ்ரீஸுப்பிரமணிய ஸஹஸ்ரநாமம் (உரையுடன்) | ரூ. | 1-50 |
| 14. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. | 0-50 |
| 15. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. | 0-50 |
| 16. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. | 0-50 |
| 17. | சிந்தனேத் தேன் ( ,, ) | ரூ. | 0-50 |
| 18. | கிழவியும் குழவியும் ( ,, ) | ரூ. | 0-50 |
| 19. | அநசூயை (வரலாறுகள்) | ரூ. | 1-00 |
| 20. | பவளேந்திரி (சிறுகதைகள்) | ரூ. | 1-00 |
| 21. | சிவனருட் செல்வர் | ரூ. | 1-00 |
| 22. | பன்னிரு திருமுறைத் திரட்டு | ரூ. | 0-50 |

(எல்லாவற்றுக்கும் தபால் செலவு வேறு)

**திருப்புகழமிர்தம் காரியாலயம்**
சிந்தாதிரிப் பேட்டை, சென்னே -

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 33 | கீலக ஞூ—தை மீ ஜனவரி 1969 | இதழ் 10

## திருப்புகழ்

### திருவருணை

கமரி மலர்குழல் சரிய புளகித
கனக தனகிரி யசைய பொருவிழி
கணைக ளெனநுதல் பிரள துகிலதை நெகிழ்மாதர்

கரிய மணிபுர ளரிய கதிரொளி
பரவ இணைகுழை யசைய நகைகதிர்
கனக வளைகல நடைகள் பழகிகள் மயில்போலத்

திமிரு மதபுழு கொழுக தெருவினி
லலைய விலைமுலை தெரிய மயல்கொடு
திலத மணிமுக அழகு சுழலிக ளிதழூறல்

திரையி லமுதென கழைகள் பலசுளை
யெனவு மவர்மயல் தழுவு மசடனை
திருகு புலைகொலை கலிகள் சிதறிட அருள்தாராய்

குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர எனதாளங்

குரைசெய் முரசமொ டரிய விருதொலி
டமட டமடம டமட டமவென
குமுற திமிலைச லரிகி னரிமுத லிவைபாட

அமரர் முனிவரு மயனு மனைவரு
மதுகை மலர்கொடு தொழுது பதமுற
அசுரர் பரிகரி யிரத முடைபட விடும்வேலா

அகில புவனமொ டடைய வொளிபெற
அழகு சரண்மயில் புறம தருளியொ
ரருண கிரிகுற மகளை மருவிய பெருமாளே.

பதவுரை

குமர குருபர குமர குருபர குமர குருபர குமர குருபர குமர குருபர குமர குருபர என=குமர குருபர என்ற ஒலியுடன், தாளம் குரை செய் முரசமொடு=தாளங்கள் ஒலி செய்கின்ற போர்ப் பறையுடன், விருது ஒலி=வெற்றி ஒலிகள், டமட டமடம டமட டம என குமுற=டமட டமடம டம என்று முழங்கவும், திமிலை சலரி கினரி முதல் இவை பாட=திமிலை என்ற பறையும் சல்லரி என்ற வாத்தியமும் கின்னரி என்ற யாழ் முதலிய வாத்தியங் களும் பாடவும், அமரர்=தேவர்களும், முநிவரும்=தவமுநிவரும், அயனும் அனைவரும்=பிரமனும் மற்றுமுள்ள எல்லோரும், கை மதுமலர் கொடு தொழுது=கையில் தேன் துளிக்கின்ற மலர்களைக் கொண்டு அருச்சித்து வணங்கி, பதம் உற=தத்தம் பதவிகளைப் பெறவும், அசுரர்=அசுரர்களின், பரிகரி இரதம் உடைபட விடும்=குதிரை யானை தேர் இவைகள் உடைபட்டு அழியவும் விடுத்த, வேலா=வேலாயுதத்தை யுடையவரே! அகில புவன மொடு அடைய ஒளிபெற=எல்லாவுலகங்களும் எங்கும் ஒளி பெற, அழகு சரண்=அழகிய திருவடிகளை, மயில் புறம் அது அருளி=மயிலின் முதுகில் வைத்து, ஓர் அருண கிரி=ஒப்பற்ற திருவண்ணமலையில் குறமகளை மருவிய=வள்ளி பிராட்டியைச் சேர்ந்த, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! கம அரி மலர் குழல் சரிய=நிறைந்த வண்டுகளுடன் கூடிய பூக்களை முடித்த கூந்தல் சரியவும், புளகித=பூரித்துள்ள, கனக தன கிரி அசைய=பொன்மயமான கொங்கை மலைகள் அசையவும், பொருவிழி=போர் செய்கின்ற கண்கள், கணைகள் என=அம்புகள் போல் கூர்மையாக விளங்கவும், நுதல் புரள=நெற்றி புரளவும், துகில் அதை நெகிழ் மாதர்=ஆடை நெகிழ்கின்ற மாதர்களின், கரிய மணிபுரள்=கழுத்தில் கரிய மணிமாலை புரள்வதால், அரிய

கதிர் ஒளி பரவ=அருமையான ஒளி பரவவும், இணை குழை அசைய=இரண்டு குழைகளும் அசையவும், நகை கதிர்=ஒளி விளக்கமுள்ள, கனக வளை கலஎன=பொன்வளைகள் கல கல என்று ஒலிக்கவும், மயில் போல நடைகள் பழகிகள்=மயில் போல நடை பயில்கின்ற அப்பொது மகளிர், திமிரு மதபுழுகு ஒழுக=பூசியுள்ள சாரமான புனுகுசட்டம் ஒழுகவும், தெருவில் அலைய=வீதியில் அலைய, விலை முலை தெரிய=விலைக்கு விற்கப்படுகின்ற தனங்கள் வெளிப்பட்டுத் தெரிய, மயல் கொடு=காம மயக்கங்கொண்டு, திலதம் அணிமுக அழகு சுழலிகள்=பொட்டு அணிந்த முக அழகுடன் அங்கும் இங்கும் சுழலுகின்ற அவர்களின், இதழ் ஊறல்=வாயிதழ் ஊறலை, திரையில் அமுது என=கடலில் பிறந்த அமுதம் என்றும், கழைகள் பல சுளை எனவும்=கரும்பு என்றும் தேன் என்றும் பலாப்பழத்தின் சுளை யென்றும் கூறி, அவர் மயல் தழுவும் அசடனை=அம்மாதர்களின் மோகத்தில் தழுவுகின்ற மூடனது, திருகுபுலை கொலை கலிகள் சிதறி=குற்றங்களும், புலாலுண்ணும் தன்மையும் கொலைத்தன்மையும் துன்பமும் என்னைவிட்டு நீங்குமாறு, அருள் தாராய்=திருவருள் புரிவீராக.

## பொழிப்புரை

குமர குருபர குமர குருபர குமர குருபர குமர குருபர குமர குருபர குமர குருபர என்னும் ஒலியுடன் தாளங்கள் ஒலிக்கின்ற முரசு வாத்தியத்துடன் வெற்றி ஒலிகள் டமடடம டம டமட டம என்று ஒலிக்கவும், திமிலை சல்லரி கின்னரி என்ற யாழ் முதலிய வாத்தியங்கள் ஒலிசெய்து பாடவும், தேவரும் முனிவரும் பிரம தேவனும் மற்ற யாவரும் கையில் ஏந்திய தேன் துளிக்கின்ற மலரால் அருச்சித்துத் தொழுது தமது பதவிகளைப் பெறவும், அசுரர்களின் குதிரை, யானை, தேர் முதலிய சேனைகள் உடைபட்டு அழியவும் செலுத்திய வேலாயுதத்தை யுடையவரே! உலகமெல்லாம் ஒளிபெற மயிலின்மீது அழகிய பாதத்தை வைத்து, திருவண்ணுமலையில் வள்ளி பிராட்டியுடன் வீற்றிருக்கும் பெருமாளே! நிறைந்த வண்டுகள் மொய்த்த மலர்களைச் சூடிய கூந்தல் சரியவும், புளகிதம் கொண்ட பொன்மயமான கொங்கைமலை அசையவும், போர் புரிவது போன்ற கண்கள் அம்புகள் போல் விளங்கவும், நெற்றிபுரளவும், உடுத்திய உடை நெகிழ்கின்ற விலைமாதர்களின் கழுத்தில் கரியமணி மாலை புரள்வதால் அருமையான ஒளி பரவவும், இரண்டு குழைகளும் அசையவும், ஒளிவீசும் பொன்வளைகள் கல கல

என்று ஒலிக்கவும், மயில் போல் நடை பயில்கின்ற அம் மாதர்கள் பூசியுள்ள சாரமான புனுகுச் சட்டம் ஒழுகத் தெருவில் அலைய விலைக்கு விற்கப்படும் கொங்கை வெளித் தோன்ற, மயல் விளைக்கின்ற நெற்றிப் பொட்டணிந்த முக அழகுடன் அங்கும் இங்குந் திரிகின்ற அம்மாதர்களின் வாயிதழ் ஊறலை, கடலில் எடுத்த அமுதம் என்றும், கரும்பு என்றும், தேன் என்றும், பலாச்சுளை யென்றும் கூறி அம் மாதர்களின் மோகத்தில் தழுவுகின்ற மூடனாகிய அடியே னுடைய குற்றங்கள் புலை கொலை பாவம் என்பனவாதி தீமைகள் தொலைய அருள்தருவீராக.

**கமரி மலர்குழல் சரிய :—**

கம அரி : கமம்—நிறைவு. அரி—வண்டு.

நிறைந்த வண்டுகள் மொய்க்கும் நறுமலர்கள் சூடிய கூந்தல் சரிய நிற்பார்கள் பொதுமாதர்கள்.

**நுதல் புரள :—**

விலைமாதர் ஆடவர் மனம் மருளுமாறு அடிக்கடி நெற்றியைப் புரட்டுவர்.

**துகிலதை நெகிழ் மாதர் :—**

பொது மகளிர் ஆடவர்களின் கவனத்தை ஈர்க்கும் பொருட்டு தமது ஆடையை நெகிழ்ப்பார்கள்.

**இதழூறல் திரையிலமுதென கழைகள் பலசுளையெனவும் :—**

காமவிகார முற்றவர்கள், மாதர்களின் இதழில் ஊறு கின்ற எச்சிலை கடலில் பிறந்த அமுதமே இது என்றும், கரும்பு இது என்றும், பலாப்பழத்தின் இனிய சுளை இது என்றும் புகழ்ந்து கூறுவர்.

**மயல் தழுவு மசடனை :—**

ஆசை மயக்கத்தால் அரிவையரைத் தழுவுகின்ற மூடனை.

**திருகு புலை கொலை கலிகள் சிதறிட :—**

திருகு—கோணல் பட்ட மனம்.

புலை—புலால் உண்ணும் பாவம்.

கொலே—உயிர்க்கொலே.

கலிகள்—துன்பங்கள்.

இவைகள் துகள்பட்டு ஒழியுமாறு ஆண்டவனே அருள் புரிக.

**குமர குருபர குமர குருபர…………எனதாளம் குரை செய் :—**

போர்க்களத்தில் தாளங்கள் ஒலிக்கின்றன. அத் தாள ஒலி கள்; அருணகிரிநாதருக்கு "குமர குருபர" என்று கேட்கின்றது. இது அவருடைய முருக பக்தியைத் தெரிவிக்கின்றது.

திருவிடைமருதூரில் வயல்களில் தவளைகள் சத்தம் செய் தன. சிவபக்தியுடைய் வரகுண தேவருக்கு அந்த வொலி ஹர ஹர என்று கேட்டது. இது அவருக்கு இருந்த சிவபக்தியைக் காட்டுகின்றது.

**" குவளைப் புனலில் தவளை யரற்ற**
**ஈசன் தன்னை யேத்தின வென்று**
**காசும் பொன்னும் கலந்து தூவியும் " —பட்டினத்தார்.**

"குமர குருபர" என்பது ஏழு அடசரங்கள். இது மிஸ்ர ஜாதி தாளம்.

குரை செய்—ஒலிசெய்கின்ற.

**திமிலே சலரி கினரி :—**

திமிலே—ஒரு வகையான போர்ப்பறை

சலரி—ஒரு வகையான பறை

கினரி—கின்னரி என்பது ஒரு வகையான வீணே.

**ஆடல் புரிவான் அரனென்றும் மூவர்தமிழ்ப்**
**பாடல் உவந்தான் பரனென்றும்—கூடலிலே**
**நன்னரிவா சிக்கு நடைபயிற்றி ஞனென்றும்**
**கின்னரிவா சிக்குங் கிளி.**

**அமரர் முநிவரு மயனுமனைவரும், மதுகை மலர் கொடு**
**தொழுது பதமுற :—**

தேவர்களும் முனிவர்களும் பிரமாதிதேவர்களும், தாம் இழந்த பதவிகளைத் திரும்பவும் பெறும் பொருட்டு, தேன் துளிக்கின்ற மலர்களைக் கையில் ஏந்தி, முருகனுடைய மந்திரங் களைக் கூறி அவருடைய திருவடியில் அர்ச்சித்து வழிபாடு புரிகின்றனர்கள்.

# கற்பு

## கலைமதி

கரவீரபுரம் என்ற நகரத்தில் மணிபல்லவன் என்ற மன்னர் அரசுபுரிந்தார். அவருடைய ஆட்சி மாட்சியுடன் விளங்கியது. அவர் கருணைநிறைந்தவர். அவருடைய ஏவலர்கள் குறிப்பறிந்து ஒழுகினார் கள். அவர் அரசுபுரியும்போது 1. அதிகமழை, 2. மழையின்மை முதலிய துன்பங்கள் உண்டாகவில்லை. ஆடுமாடுகளும் எல்லை கடந்து புல்மேய்வதில்லை. அவருடைய அமைச்சர்கள் மதிநலம் படைத்த வர்கள்.

அவர் செய்த தவத்தின் பயனாகப் பிறந்தவள் கலைமதி. பெயருக்கு ஏற்ப அவள் சகல கலைகளும் கற்றுணர்ந்தாள். முழுமதி போல் விளங்கினாள் கலைமதி.

---

மலர் இட்டு வணங்குவது சிறந்த வழிபாடு.

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலும் அதுகண்டருள் செய்யா நிற்கும்" —திருமந்திரம்.

**அகில புவனமொடடைய வொளிபெற அழகு சரண்மயில் புறமதருளி :—**

முருகப் பெருமான் மயில் மீது தமது திருவடியை வைத்த போது, அவருடைய ஞான வொளி உலகமெல்லாம் பரந்து விரிந்து வீசியது.

முருகனுடைய திருவடி நூறு கோடி சூரியப் பிரகாச மானது.

"உததியிடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலப கக மயிலின் மிசை
உகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்"
—சீர்பாதவகுப்பு.

### கருத்துரை

திருவண்ணாமலையில் வாழும் திருமுருகா! அடியேனுடைய புலை கொலை முதலிய இடர்கள் நீங்கத் திருவருள் புரிவாய்.

---

(1) அதிவிருஷ்டி (2) அனாவிருஷ்டி.

ஒரு நாள் மாலை நேரம். அரண்மனைக்கு அருகில் இருந்த மாந் தோப்பில், விண்ணுற வளர்ந்திருந்த மாமரத்தின் கீழ் மன்னர் பெருமான் அரசமா தேவியுடன் சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந் தார். கலைமதி அருகில் விளையாடிக் கொண்டிருந்தாள்.

பணியாளர் அருகில் நின்று கொண்டிருந்தார்கள். மாமரங் களில் காய்களும் கனிகளும் நிறைந்திருந்தன. வழியே சென்ற ஒரு ஏழை அரசர் இருப்பதை அறிந்தானில்லை. ஒரு கல்லை எடுத்து மாமரத்தில் எறிந்தான். ஒரு பழம் விழுந்தது. அதை எடுத்து சுவைத்து உண்டான். மறுபடியும் ஒரு கல்லை எறிந்தான்.

அக்கல் குறி தவறி ஒருபுறத்தில் அமர்ந்திருந்த மணிபல்லவ மன்னருடைய தலையில் விழுந்தது. சிறிது காயம் ஏற்பட்டது. உடனே புலிக்கூட்டம் போல் அரசருடைய ஏவலர்கள் அந்த ஏழை மீது பாய்ந்தார்கள். அவன் முதுகில் பளார் பளார் என்று அறைந் தார்கள்.

''மூடனே! குடிகேடனே! கல்லெறிந்து மன்னருடைய தலையில் உதிரம் வரச் செய்துவிட்டனையே! உனக்கு என்ன திமிர்?'' என்று வைதார்கள். ஒருவன் மன்னன் மீதுள்ள அன்பின் காரணமாக ஓவென்று கதறி யழுதாள். ''இவனை எளிதில் விடக் கூடாது. மரண தண்டனை விதிக்க வேண்டும்'' என்றான் ஒருவன்.

மணிபல்லவ மன்னர் அடிக்கின்றவரை விலக்கினார். இந்த ஆரவாரத்தைக் கண்டு அருகில் வந்தாள் கலைமதி. தந்தையின் தலை யில் உள்ள உதிரத்தைத் தன் மேலாடையால் துடைத்தாள். அவள் கண்களில் நீர் பெருகியது. அரசமாதேவி முகஞ் சிவந்து நின்றாள்.

ஏழை தான் செய்த பெரும் பிழையை நினைந்து உடல் நடுங்கி உள்ளம் ஒடுங்கி நின்றான். அரசர் ''இவனை என்ன செய்யலாம்'' என்றார். ஒருவன் ''இவன் கையைக் கரும்பை ஒடிப்பதுபோல் ஒடிக்க வேண்டும்'' என்றான். மற்றொருவன் ''இவன் தலையை இள நீர் சீவுவது போல் சீவி யெறிய வேண்டும்'' என்றான் இன்னொருவன் கொதிக்கின்ற எண்ணெயில் இட்டு அப்பளப்பூவைப் போல் பொரிக்க வேண்டும்'' என்றான்.

கலைமதி தந்தையாரைப் பார்த்துக் கூறுவாளாயினாள். ''தந்தையே! சிறியவளாகிய நான் கூறுவதைச் செவிமடுத்தருள வேண்டும். இதோ நிற்கின்ற மாமரம் ஓரறிவுடையது. தாங்கள் ஆறறிவுடையவர். அறிவில்லாத ஓரறிவு மட்டும் படைத்த இம் மரம் தன்மீது கல்லெறிந்தவனுக்குச் சுவையுள்ள கனியைக் கொடுத்து ஒருவேளைப் பசியை யகற்றியது. ஆறறிவும் அருட் சிந்தையும் படைத்த தங்கள் மீது கல்லெறிந்த இந்த ஏழைக்கு

ஆயுள் உள்ளவரை பசியை மாற்றி அருள்புரிதல் வேண்டும். மரத்துக்குள்ள பண்பு மனிதனிடம் இருக்க வேண்டாமா? அப்பா மரமும் தன்மீது கல்லெறிந்தவனுக்கு கனிதந்து கருணைபுரிந்ததே. மரத்தைக் காட்டிலும் பலமடங்கு உயர்ந்த மனிதன் இவனை அடிக்கலாமா? கொல்லலாமா? இவன் தங்கள் மீது வேண்டும் என்று கல்லெறிந்தான் இல்லை. மரத்தின் மீது எறிந்த கல் தவறி தங்கள் மீது விழுந்தது. ஆதலால் மரத்துக்குள்ள பண்பினும் பல மடங்கு மனிதனிடம் இருக்கவேண்டும். ஆதலால் இவன் ஆயுள் உள்ளவரை அரண்மனையில் பசியாறுமாறு உத்தரவு செய்யுங்கள்'' என்றாள்.

புதல்வியின் பொருளடங்கிய சொற்களைக் கேட்டார் அரசர். என் தவப்புதல்வி சொல்லியது முற்றிலும் உண்மை. தன் மீது கல்லெறிய மாமரம் ஒரு வேளைக்கு மட்டும் கனிதந்து இவன் பசியை மாற்றியது. நான் மனிதன். மேலும் மன்னர் மன்னன் ஆனபடியால் என்மீது கல்லெறிந்த இவன் தன் ஆயுள் வரை அரண்மனையில் பசியாறவுண்டு இன்புறுவானாக'' என்று கூறி உத்தரவிட்டார்.

இதனைக் கேட்டான் அந்த ஏழை. அரச குமாரியின் அன்பின் திறத்தையும், பண்பின் வரத்தையும், மன்னருடைய கருணையுள்ளத்தையும் கண்டு கண்ணீர் வடித்தான். அரசருடைய அடிமலர் மீது வீழ்ந்து அழுதான் தொழுதான். அது முதல் அவனுக்கு அரண்மனையில் தினம் மூன்று வேளை அன்னமிடப்பட்டது.

மணிபல்லவர் மறைவுக்குப்பின், அவருக்கு வேறு ஆண் சந்ததியில்லாமையால் கலைமதி அரியணை யமர்ந்து அரசுபுரிந்து வந்தாள்.

அந்த நகரில் வட்டித் தொழில் புரிந்து வந்த கரியமாணிக்கஞ் செட்டியார் அயலூர் போய் பணம் வசூலித்து, வில்வண்டியில் தன் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார். சற்று கண்ணயர்ந்து விட்டார். எண்ணூறு வராகன் அடங்கிய பணப்பை வண்டியில் இருந்து நழுவி கீழே விழுந்து விட்டது. தனது இல்லம் போய் கண் விழித்தார். வண்டியில் பணப்பையில்லை. தீயில் விழுந்த புழுவைப் போல் துடித்தார். ''மடப் பயலே! நீ கவனிக்கவேண்டாமா? முட்டாளே! மதிகெட்டவனே'' என்று வண்டியோட்டுபவனைப் பலவாறு வைதார். வ்ந்த வழியில் விரைந்து தேடினார். பணப்பை கிடைக்கவில்லை. எடுத்தவன் தருவானா? எந்தப் பாதகன் கையில் கிடைத்ததோ? ஐயோ! பணம் போயிற்றே! என் செய்வேன் என்று கூறிப் பதறினார்.

மாலை நேரம் ஆதலால் இருள் சூழ்ந்திருந்தது. அவ்வழியே வந்தார் பரமபக்த சிகாமணியாகிய பரமகுரு.அவர் பணப்பையைக் கண்டார். எடுத்துக்கொண்டுபோய் தன் வீட்டில் பெட்டியில்

வைத்தார். "அந்தோ! இது யாருடைய பொருளோ? பணத்தை இழந்தவன் உள்ளம் என்ன பாடுபடுமோ? இதனை வெளியிட்டால் பலரும் என்னுடையது என்னுடையது என்று சொல்லக் கூடும். உழைத்த பணமே நம்மிடம் நிற்பதில்லை. அடுத்தவனுடைய உடைமை நமக்கு ஏன்? நமக்கு வறுமை யிருந்தாலும் வறுமையில் செம்மையிருக்க வேண்டும். உடையவர் இன்னார் என்று அறிந்து உடையவனிடம் உடைமையைச் சேர்க்கவேண்டும்" என்று கருதினர்.

மறு நாள் காலை தண்டோரா அறையப்பட்டது. "இதனல் அறிவிப்பது என்ன என்றால் நமது நகரில் கரியமாணிக்கஞ் செட்டியா ருடைய பணப்பை வண்டியில் இருந்து நழுவி விழுந்து விட்டது. அதனைக் கண்டவர் செட்டியாரிடம் கொடுத்தால் அவர் 100 வராகன் இனமாகத் தருவார். ஆதலால் எடுத்தவர் கொடுக்குமாறு வேண்டுகின்றார்" என்ற வாசகங்கள் ஒலித்தன.

இந்த வாசகங்களை பரமகுரு கேட்டார். "ஓகோ! நம்மிடம் கிடைத்த பணம், நம் நகர் சிறந்த லட்சாதிபதி கரியமாணிக்கம் செட்டியாருடையது போலும். இதனை அவரிடம் ஒப்படைத்து,அவர் தரும் நூறு வராகனை வாங்கி நம் தெருவில் இடிந்து கிடக்கும் விநாயகர் கோயில் திருப்பணியைச் செய்வோம்"என்று எண்ணினர்.

பரமகுரு வழக்கமாகச் செய்யும் வழிபாட்டினை முடித்துக் கொண்டு பணப்பையுடன் செட்டியாருடைய சிறந்த மாளிகைக்குச் சென்றார். அவரைப் பணிந்து நின்றார். யாசகத்து வந்தவன் என்று எண்ணிய செட்டியார் "ஏய்! உனக்கு அறிவிருக்கின்றதா? கேளாமல் ஏன் உள்ளே வந்தாய்! போ வெளியே! யாரடா அங்கே! இந்தத் தடிப் பயலை வெளியே தள்ளு. இல்லையேல் நாயை அவிழ்த்துவிடு" என்று சீறி விழுந்தார். திரண்டதோளும் உருண்ட உடம்பும் படைத்த ஒருவன் வந்து பரமகுருவின் கழுத்தில் கையை வைத்துத் தள்ளத் தொடங்கினன்.

நெற்றியில் திருவெண்ணீறும், கழுத்தில் உருத்திராட்ச மாலை யும், உள்ளத்தில் உண்மை யொளியும் படைத்த பரமகுரு சிரித்த முகத்துடன் கூறுவாராயினர்.

"செட்டியாரவர்களே! நான் தங்களிடம் கடன் கேட்கவோ யாசகத்துக்கோ வரவில்லை. ஏன் வீணுகச் சீறி விழுகின்றீர்! பொறுமை பெருமை தரும். தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க: காவாக்கால் தன்னையே கொல்லும் சினம் என்றார் திருவள்ளுவர். தண்டோராவைக் கேட்டேன். தங்கள் பணப்பை நழுவிவிட்ட தாக அறிந்தேன். அது விஷயமாகத்தான் வந்தேன்"

"ஓ அப்படியா? இந்த நாற்காலியில் இரும், ஐயா வணக்கம். நான் அவசரப்பட்டு உம்மை விரட்டினேன். மன்னியுங்கள். அடேய்! தடிப்பயலே! உள்ளே போய் இவருக்குப் பாலும் பழமுங்கொண்டு வந்து கொடு. ஐயா!: பணப்பை யாரிடம் கிடைத்துளது. உமக்கு ஏதாவது தகவல் தெரியுமா? காலம் மோசமாகி விட்டது. எடுத்த தடிப்பயல் தருவானு? நூறு வராகன் தருவதாக முடிவு செய்துளேன். உமக்குத் தகவல் தெரிந்திருந்தால் சொல்லும். உமக்குக் கோடி புண்ணியம் வரும்" என்ருர் செட்டியார்.

"செட்டியாரே! நீர் அஜாக்ரதையால் பணப்பைத் தொலேத்து விட்டீர், எடுத்தவனே தடிப்பயல் என்று வைவது முறையா? கல்லேச் சிந்திஞல் பொறுக்கலாம், சொல்லேச் சிந்திஞல் பொறுக்கமுடியாது. பணப்பை என்னிடந்தான் கிடைத்தது. நான் ஏழை. ஆனுல் பிறர் பொருளே விரும்பாதவன், இந்தாரும். உங்கள் பணப்பை" என்று கூறி பணப்பையை அவர் முன் வைத்தார்.

"செட்டியாரே! எங்கள் தெருவில் ஒரு விநாயகர் ஆலயம் இடிந்து கிடக்கின்றது. தெருவில் உள்ளவர் அக்கோயிலேப்பற்றி சிந்திக்கின்ருர்கள் இல்லே. எனக்கு அதனேப் பழுது பார்க்க வேண்டும் என்ற அவா? தாங்கள் 100 வராகன் தருவதாகக் கூறினீர் அல்லவா. அதைத் தந்தால் அந்த ஆலயத்தைச் சீர் செய்வேன். தங்களுக்குப் புண்ணியமும் புகழும் உண்டு. பணம் என்னிடம் தரவேண்டிய அவசியங்கூட இல்லே. அந்த நூறு வராகனேக் கொண்டு தாங்களே அந்த ஆலயத்தைப் பழுது பார்த்தால்போதும், விநாயகப் பெருமானுடைய கருணே தங்கட்கும் தங்கள் குடும்பத்துக்கும் துணேபுரியும்" என்ருர் பரமகுரு.

பணப்பையைப் பார்த்தவுடன் செட்டியாருக்குப் போன உயிர் திரும்பியதுபோல் மட்டற்ற மகிழ்ச்சி. அகமும் முகமும் மலர்ந்தன. குதித்தார். பரம குருவை மதித்தார். அவருடைய நேர்மையைத் துதித்தார். பணத்தைக் கொட்டி எண்ணிப்பார்த்தார். சரியாக 800 வராகன் இருந்தது. பழையபடியே பையில் இட்டுக் கட்டினுர். உள்ளே கொண்டு போய் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டினுர். பெட்டிச் சாவியை இடுப்பில் தொங்கவிட்டார். "ஐயா! மிக்க நன்றி. உமக்குக் கடவுள் கருணேபுரிவார். உமது உதவியை ஒரு போதும் மறவேன். போய் வாரும்" என்ருர்.

பரமகுரு, "செட்டியாரே! தாங்கள் வாக்களித்தபடி 100 வராகனேத் தாரும். விநாயகர் திருப்பணிக்கு ஆகும்" என்ருர்.

செட்டியார் "ஐயா! உம்மை நல்லவர் என்று எண்ணினேன். சுத்த மோசடிக்காரனுக இருக்கின்ருயே! இதில் தொள்ளாயிரம்

வராகன் இருந்தது. இப்போது எண்ணிப் பார்த்ததில் எண்ணூறு வராகன் மட்டுமேயுள்ளது. நீயே நூறு வராகன் எடுத்துக்கொண்டாய். மறுபடியும் நூறு வராகன் கேட்கின்றாயே. இது என்ன நியாயம்? பேராசை கூடாது. ஆசையால் அழிந்தவர்பலர். வீணாக மனதை ஆசைக்கடலில் சுழலவிடாதே. மரியாதையாக வீட்டை விட்டுப்போ. இல்லையேல் உன் தோலை உரித்துவிடுவேன். பட்டையும் கொட்டையுமாக நிற்கின்றனையே! பேராசை பிடித்தபேதையே போ வெளியே'' என்றார்.

இந்த அடுக்காத துடுக்கான சொற்களைக் கேட்டு பரமகுரு அதிர்ச்சியடைந்தார். ''செட்டியாரே! பேராசை எனக்கா உமக்கா என்று சிந்தித்துப் பாரும், உமது மனமே உண்மையைச் சொல்லும். நீர் பெருந்தனவந்தர். நான் ஏழை. ஆனால் நான் புரட்டும் திருட்டும் உருட்டும் அறியாதவன், பிறர் பொருளை எட்டியாக நினைப்பவன். நான் இந்தப் பையை அவிழ்க்கவேயில்லை. இதில் எவ்வளவு இருந்தது என்று உண்மையில் தெரியாது. எடுத்து வைத்திருந்து அப்படியே கொணர்ந்துகொடுத்தேன். ஆதலால் சொன்ன சொல்லை நிறைவேற்றும். இல்லையேல் உம்மை எளிதில் விடமாட்டேன்'' என்றார்.

''ஓய்! தடிப்பயலே! நீ என்ன செய்வாய்? நீ ஒரு துரும்பு. நான் ஒரு இரும்பு. உன்னால் என்ன செய்ய முடியும்! பல்லைக் கொட்டிக் கையில் தருவேன் ஜாக்ரதை. இனி இங்கே அரை விநாடி கூட நிற்கக்கூடாது. வெளியே போ'' என்று சிங்கம் போல் கர்ச்சனை புரிந்தார்.

வாடிய முகத்துடன் பரமகுரு புறப்பட்டார். அவரைப்பார்த்து செட்டியார் இடி இடி என்று சிரித்தார். பரமகுருவுக்குத் தாங்க முடியாத வருத்தம். இவன் பணத்திமிரால் மதங்கொண்டு இருக்கின்றான். இவனைச் சும்மாவிடக் கூடாது என்று, எண்ணி அரசவைக்குச் சென்று, அரியணை மீது வீற்றிருக்கும் கலைமதியிடம் நிகழ்ந்ததைக் கூறி கண்ணீர் வடித்தார்.

கலைமதி பரமகுருவைப் பார்த்து ''நாளை இது பற்றி விசாரணை செய்து நியாயம் வழங்குவேன்'' என்றாள். இச் செய்தி நகரமெங்கும் பரவியது.

மறுநாள் காலை இந்த வழக்கைப்பார்க்க அரசவையில் பெருங் கூட்டங் கூடியது. தடாதகைப் பிராட்டியைப்போல கலைமதி அரியணை மீது அமர்ந்திருந்தாள். 'பரமகுரு ஒருபுறம் நின்றிருந்தார். கலைமதியின் கட்டளைப்படி ஒரு சேவகன் கரியமாணிக்கஞ் செட்டியாரை அழைத்து வந்து நிறுத்தினன். செட்டியார் இடையில்

பட்டாடையும், பட்டுச்சட்டையும், ஒவ்வொரு விரல்களிலும் மின்னுகின்ற வைரமோதிரங்களும், ஒளிசிந்துகின்ற வைரக்கடுக்கனும், பெரிய தங்கச் சங்கிலியுடன் கூடிய மார்பும் பொலியக் காட்சியளித்தார். கலைமதி செட்டியாரை அன்புடன் வரவேற்று ஒரு ஆசனத்தில் அமரச் செய்தாள்.

கலைமதி "ஐயா! தங்கள் முறையீடு யாது? கூறும்."

பரமகுரு "நீதி வழுவாத நேரிழையே! நேற்று முன்நாள் இருட்டில் ஒரு பணப்பையைக் கண்டேன். நான் வறியவன், ஆனாலும் நேர்மைத் தவறாதவன். வறிஞர்க்கழகு வறுமையில் செம்மை என்று படித்தவன். பணப்பையைக் கொண்டு போய் வீட்டிலே வைத்தேன். உடையவர் கேட்டால் உடைமையைத் தரவேண்டும் என்று எண்ணினேன். பணப்பையை எடுத்தவர் கொடுத்தால் 100 வராகன் தருவதாக தண்டோரா அறையக் கேட்டேன். பணப்பையைச் செட்டியாரிடம் தந்து, அவர் கூறிய சொற்படி, எங்கள் வீதியில் பழுதடைந்துள்ள விநாயகர் ஆலயப் பணிக்கு 100 வராகனைத் தருமாறு கேட்டேன். செட்டியார் தரமறுக்கின்றார். ஆதலால் தாங்கள் செட்டியாரிடம் இருந்து 100 வராகனை வாங்கி என்னிடம் தாருங்கள். அல்லது செட்டியாரே 100 வராகனுக்குத் திருப்பணி செய்யச் செய்யுங்கள். அல்லது தாங்களே வாங்கி திருப்பணி செய்யுங்கள். இதுதான் என் முறையீடு" என்றார்.

கலைமதி செட்டியாரே! உங்கள் வாக்கு மூலம் யாது? செட்டியார் "அம்மையே! அறநெறி வழுவாத அரசியே! இவன் சுத்தப் புரட்டுக்காரன். பேராசைக்காரன். நான் 100 வராகன் தருவதாகக் கூறியது உண்மை. நான் பல லட்சங்கட்கு அதிபதி. கடுகளவு கூடக் கனவிலும் பொய்மையைக் கருதாதவன். என் தகுதிக்கு நூறுவராகன் என்பது ஒரு சுண்டைக்காய். சத்தியமாகக் கூறுகின்றேன் என் பணப்பை 900 வராகன்கள் அடங்கியது. இப்போது எண்ணிப் பார்த்தால் 800 வராகன்கள் மட்டுமே யுளது. இவனே 100 வராகனை எடுத்துக்கொண்டு மறுபடியும் என்னிடம் 100 வராகன் கேட்டு வீணாக என்னை இடர்ப்படுத்துகின்றான். நான் மிகவும் கண்ணியமானவன். ஆதலால் பொய் பேசும் இவனுக்கு ஏற்ற தண்டனையைத் தாங்கள் தான் தரவேண்டும்.

கலைமதி "ஐயா! தாங்கள் 100 வராகனை எடுத்துக் கொண்டீரா? உள்ளதை உரையும்'!

பரமகுரு, "அம்மையே! நான் 100 வராகனை எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உடையவனாயிருப்பின் முழுவதுமே எடுத்துக்கொண்டிருப்பேனே? நான் பையை எடுத்தது

கடவுள் ஒருவருக்குத் தானே தெரியும். நான் பணப்பையை அவிழ்க்கவே யில்லை. இது தான் உண்மை.''

கலைமதி:—செட்டியாரே! அந்தப் பணப்பையைக் கொண்டு வாரும். நான் எண்ணிப் பார்த்து நியாயம் வழங்குவேன்''

செட்டியார் பணப்பையைக் கொணர்ந்து அரசியின் முன் வைத்தார். தன் அமைச்சனை எண்ணச் செய்தாள். சரியாக 800 வராகன் மட்டுமே இருந்தது. கலைமதி தன் அறிவுக் கண்ணுல் நடந்தது இதுதான் என்று ஊகித்து உணர்ந்தாள். நியாயம் வழங்க லாயினுள்.

''பெரியோர்களே! சபையோர்களே! நான் செட்டியார் கூறும் சொற்களை நம்புகின்றேன். இவருடைய ஏற்றம் தோற்றம் இவை களைப் பார்த்தால், பொய் சொல்ல வேண்டிய அவசியமேயில்லை. இவருக்கு நூறு வராகன் என்பது ஒரு சிறிய கடுகுபோன்றது. ஆதலால் பணப்பையில் 900 வராகன் இருந்தது என்பதை நான் ஒப்புக் கொள்ளுகின்றேன்.

இதோ இங்கே நிற்கும் பரமகுரு என்பவரும் நேர்மையுடைய வராகக் காட்சிதருகின்றுர். உள்ளபடி இவர் 100 வராகனை எடுத் துக் கொள்ளும் குணம் உடையவராக இருப்பாராயின் யாரும் இல்லாத இடத்தில் அகப்பட்ட பணப்பையை இவரே எடுத்துக் கொண்டிருக்கலாந்தானே. வலியக் கொண்டுபோய் செட்டியார் இடம் கொடுத்து 100 வராகனைத் தருமாறுகையேந்திக் கேட்டிருக்க மாட்டார்.

செட்டியாரும் பொய் சொல்ல மாட்டார். செட்டியார் உத்தமர். பெரும் பணக்காரர். உண்மையைக் கடைப்பிடித்தவர். ஆதலால் செட்டியார் சொன்னபடி பணப்பையில் 900 வராகன் தான் இருந்திருக்க வேண்டும். ஆனுல் இந்தப் பையில் 800 வராகன் தான் இருக்கின்றது. இதனை நன்கு சிந்திக்க வேண்டும். செட்டியார் கைநழுவ விட்ட பணப்பை 900 வராகன் அடங்கியது. இந்தப் பணப்பை 800 வராகன் அடங்கியது. ஆகவே அந்தப் பை வேறு யாரிடமோ சிக்கிக் கொண்டிருக்கின்றது. இதில் 800 வராகனே யிருக்கின்றபடியால், இது வேறு ஒருவருடைய பணப்பையாக இருக்கவேண்டும்.

செட்டியாரே! உம்முடைய பணப்பை 900 வராகன் அடங்கி யது. அது வேறு ஒருவன் பால் கிடைத்திருக்க வேண்டும். ஆதலால் அது கிடைத்த போது தாங்கள் 100 வராகன் தந்து பெற்றுக் கொள்ளும். ஐயா! பரம குருவே! இந்தப் பையை உன்பால்

# என்று வந்தாய் ?

---

## வேலூர் திரு. மு. பெருமாள்

"தில்லையம்பலத் தலமொன்றிருக்குதாம், அதைக் கண்ட பேர்க்கு ஜனன மரணப் பிணியைத் தவிர்க்குதாம்" என்னும் நெஞ்சையுருக்கும் பாடலை நந்தனார் காலட்சேபம் நடத்திக் கொண்டிருந்த ஒரு பாகவதர் பாடக்கேட்ட இரு அன்பர்கள் உணர்ச்சி வசப்பட்டுத் தம்மை மறந்து மெய் சிலிர்த்தனர். இவ்வாண்டில் வரப்போகும் ஆருத்திரா தரிசனத்துக்கு நாமிருவரும் அவசியம் சிதம்பரம் சென்று சேவிக்கலாம் என முடிவு செய்தனர்.

சிவஞானமும் சங்கரனும் சிறந்த அன்பர்கள். குறைந்த வருமானமுள்ள குடும்பத்தினராயினும், நற்குணம் நிறைந்த சிவபக்தர்கள். ஆருத்திரா தரிசன விழாவும் அடுத்து வந்தது. சேமித்து வைத்திருந்த பணத்தை எடுத்துக்கொண்டு சென்றனர் சிதம்பரம். நந்தனாரின் உருக்கமான பாடல்கள் அவர்கள் நெஞ்சில் நிழலாடின. நடராஜப் பெருமானை நினைந்துருகிய வண்ணம் ரயில் வண்டியில் செல்கின்றனர். முதன் முறையாகச் செல்பவர்கள். பக்கத்திலிருந்தவர்களிடம் "இன்னும் சிதம்பரம் எத்தனை தூரமிருக்கும்" என்றனர்.

"அதோ நான்கு கோபுரங்கள் தெரிகின்றனவே அதுதான் சிதம்பரம் என்றனர் ?"

---

தருகின்றேன். கொண்டுபோய் வீட்டில் வைப்பீராக. இப் பைக்கு உடையவனிடம் கொடும். இல்லையேல 800 வராகனையும் செலவழித்து விநாயகர் ஆலயத்திருப்பணியை அழகாகச் செய்து முடியும். பணப்பையை நீர் எடுத்துக்கொண்டு போய் வாரும். செட்டியாரே! நீர் உத்தமர். பொய் செல்லத் தெரியாதவர், நீர் வீட்டிற்குப் போம். 900 வராகன் அடங்கிய பை கிடைக்கின்ற போது பெற்றுக் கொள்ளும்" என்று தீர்ப்புக்கூறினாள். சபையில் இருந்த எல்லோர் முகத்திலும் மலர்ச்சியுண்டாகியது.தீர்ப்புக்கூறிய சதுரப்பாட்டை மெச்சினார்கள். தான் கூறிய பொய் மொழியால் முழுவதையும் இழந்த செட்டியார். வாடிய முகத்துடன் தன் இல்லம் போனார். இவ்வாறு கலைமதி நீதிவழங்கிக் கொண்டு அரசு புரிந்து வந்தாள்.

இருவருக்கும் எல்லையில்லாத மகிழ்ச்சி. எழுந்து நின்றனர் வண்டியிலேயே. திசைநோக்கி இருகரங்களையும் சிரமேற் குவித்துத் தலைவணங்கித் தொழுதனர்.

நம் வாழ்நாளிலே இந்நாள்தான் ஒரு பொன்னுளாகும் என மனமகிழ்ந்தனர். ஆஹா! "உயரும் சிகரக் கோபுரம் தெரியுதாம், உள்ளம் குளிரக் கருணை புரியுதாம்" என்னும் நந்தனுர் பாடல் இன்று நமக்கு உண்மை அனுபவமாகி விட்டதே, என ஆனந்த மேலிட்டனர்.

சிதம்பரம் ரயிலடி சேர்ந்தனர். கோயிலை நோக்கி இருவரும் சென்றனர். ஆயிரமாயிரமான மக்கள்கூட்டம் ஆருத்திரா தரிசனத்துக்காகச் சென்ற வண்ணமிருந்தனர்! கோபுர வாயிலில் இருவரும் கூட்டமிகுதியில் நசுங்கித் திணறினர். ஆயிரக்கால் மண்டப முன்னே வந்து அடைந்தனர். மக்கள் கூட்டம் நெருக்குவதும், மோதுவதும் கண்ட சங்கரனுக்கு மனம் சலித்துவிட்டது. பசி வேதனையுங்கூட. பசி "தாங்காதவன்." என்னுல் சகிக்க முடியவில்லை. நான் சற்று வெளியில் சென்று கூட்டம் குறைந்ததும் வருகிறேன், என்றுன் சிவஞானத்திடம்.

"வந்த வேலையை மறந்தாயோ? இன்னும் சிறிது நேரத்தில் எம்பெருமான் நடராஜரது ஆருத்திரா தரிசனக் காட்சி நிகழுமாமே! அம் மாபெரும் புண்ணியக் காட்சிக்காகத்தானே நாமிங்கு வந்தோம். இதோ பார் இலட்சக்கணக்கான அன்பர்கள் இத்தனை இடிபாடுகளையும் மறந்து எம்பெருமான் நற்காட்சிக்காக நிற்கின்றனர்! இவ்வானந்தக் காட்சியினை நாம் எப்போது காணப் போகின்றேம்? சித்தத்தைச் சிவன்பாலே வைத்துச் சிறிது பொறு" என்றுன் சிவஞானம்.

சங்கரன், "இதைவிட நான்கு மடங்குகொண்ட நான்கு லட்சம் மக்கள் கூட்டத்தை, நம் பக்கத்து நகரிலே நடந்த கட்சி மகாநாட்டில் நான் பார்த்துள்ளேன். இக்கூட்டம் அதைவிட ஒன்றும் பிரமாதமில்லை.

சிவஞானம் அது ஒரு தெருக்கூட்டம். இது திருக்கூட்டம். அதோ பார் அன்பர்கள் சிலர் ஆண்டவனை இன்னிசையோடு வாழ்த்திக் கொண்டிருப்பதை. இதோ பார் சிலர் உருக்கமாகத் தோத்திரப் பாடல்களால் துதிப்பதை. இன்னும் சிலர் எம்பெருமான் திருவடிகளில் அர்ச்சித்து மகிழ மலர்களை ஏந்திய கையோடு நிற்கின்றனர். மற்றும் சிலர் தொழு தகையும், அழுத கண்ணுமாகவுள்ளனர். ஒரு சிலர் பசிதாகத்தையும் மறந்து இறைவன் பக்தியில் ஈடுபட்டுத் துவண்டு நிற்கின்றனர்.

ஆ! அதோ ஆலயமணியோசை எழுகின்றது! எம்பெருமான் எழுந்தருள்கின்றார் போலும்! மேளம், தாளம், தாரை, தப்பட்டை, சங்கு, மணிகள் முதலான இன்னிசைகள் முழங்கத் தில்லையம்பல வாணப் பெருமான் திரு நடனமாடிய வண்ணம் எழுந்தருளி வருகின்றார்! ஆயிரமாயிரமான அடியார் பெருமக்கள் 'அரகர நமப் பார்வதீபதயே' என முழங்கி இரு கரங்களையும் சென்னிமிசைக் கூப்பி வணங்குகின்றனர்!

ஆ! ஆ! எல்லையில்லாத இன்பக் காட்சியாக வுள்ளதே இத் தில்லை நடராஜப் பெருமானது தரிசனக் காட்சி! ஆ! ஆ என்னே எம்பெருமானின் அற்புதக் காட்சி!''

''எனக்கு ஒன்றும் அற்புதமாகத் தெரியவில்லையே! நான் என்னமோ பெரும் பிரமாதமான காட்சியாக இருக்கும் என எதிர் பார்த்தேன். இந்த மாதிரி நடராஜர் நம் ஊர்க் கோயிலிலும் உள்ளதே!'' என்றான் சங்கரன்.

நம் ஊர் கிணற்றிலும் ஜலம் உள்ளது! இமயமலை அடிவாரத்தி லிருந்து எழுந்து விளையாடி ஓடிவருகின்ற புனிதமான கங்கையின் புண்ணிய ஜலம். இரண்டையும் ஒப்பிட முடியுமா? நம் சிறு கிராமமும் ஒரு ஊர்தான். நம் நாட்டின் தலைநகரும் ஊர்தான். இரண்டும் ஒன்றாகுமா? இதென்ன சங்கரா திடீரென இங்ஙனம் பேசுகின்றாய்? நம் சிறு கிராமத்திலும், மற்றும் உலகில் பல ஊர்களிலும் கோயில்கள் உள்ளன, என்றாலும் சிதம்பரத் தலத்துக்குத்தான் கோயில் என்னும் சிறப்புப் பெயர் உரியதாகும் என்பது பெரியோர்கள் முடிவாயிற்றே! ஸ்தானபலம் அதாவது இட விசேஷம் என்பார்களே அதுபோன்று சிதம்பரம் ஸ்தல மகிமை மிக்கதாயிற்றே! இது தெரியாதா உனக்கு? ஆருயிர்கள் அனைத்தும் அசைந்து இயக்க ஆண்டவன் அம்பலக் கூத்தாடும் அரிய தலமாயிற்றே இச் சிதம்பரம். உம் சரி. சரி. உரையாடும் நேரமிதுவன்று.

இதோ எம்பெருமான் எழுந்தருள்கின்றார் தரிசனம் செய்வோம். ஆ! ஆ! அழகான நடராஜப் பெருமான் அருட்கோலம் எளியேனது நெஞ்சை உருக்குகின்றதே! என்னே அற்புதமான ஆனந்தக் காட்சி! தூக்கிய திருவடியின் மாட்சிதான் என்னே! ஆனந்தக் காட்சி! ஆ! ஊரிலிருந்து என்று வந்தாய்? என்று கேட்பது போன்ற அப்பெருமானது திருக்கரக்காட்சியின் விசாரணைக் குறிப்பை உணர்த்தும் உருக்கமான காட்சியில் அடியேனது உள்ளம் உருகுகின்றதே! அப் பெருமானது விசாரணைக் குறிப்பைக் கண்டு வியக்காமலிருக்க முடியவில்லையே! என்னே! என்னே! எம்பெருமான் கருணை இருந்தவாறுதான் என்னே! தில்லையம்பலவாணரது தெய்வத் திருக்கருணை

ஒப்பற்ற உருக்கமிக்க கருணையாகும். அன்பரே! கண்டீரா அப்பனது விசாரணைத் திருக்கரக் குறிப்பை?'' என்றான் சிவஞானம்.

"என்னப்பா என்னமோ கூறுகின்றாய்! எனக்கு ஒன்றும் புரியவில்லையே!'' என்றான் சங்கரன்.

"எங்ஙனம் புரியும் அன்பரே உமக்கு! மனத்தை எங்கோ வைத்துவிட்டு வெறும் கண்ணால் மட்டும் கண்டால் புரியுமா?''

"பின் எங்ஙனம்தான் பார்க்கவேண்டும் புரியுமாறு புகல்க.''

"மனதை ஒருமுகப்படுத்தி மற்ற சிந்தனைகளில் செல்ல விடாமல் உள்ளம் உருக நடராஜப் பெருமானை நிமிர்ந்து வழிபட்டால் புரியும்.''

"இங்ஙனம் வழிபட்டால் என்ன வரும்?''

"உள்ளம் உருகி இறைவனை வழிபட்டால் ஊனம் ஒன்றும் நேராது வாழலாம். எம பயமின்றியும் இன்புற்று வாழலாம். ஏனெனின் அருட் பெருஞ்சோதி ஆண்டவனான அம்பலவாணப் பெருமான், ஒருமனப்பட்டு உள்ளமுருகி வழிபடும் அடியார்கள் பொருட்டு எமனையே தண்டித்துத் திருத்தியவர். மாபெருங் கருணையாளரான நடராஜப் பெருமான் தம்மைத் தரிசிக்க வருகின்ற அடியார் பெருமக்களை, வரும்போதே என்று வந்தாய்? என்னும் திருக்கரக் குறிப்பு விளங்கக் காட்சியருள்கின்றார்.

"இக்கருத்தை உமக்கு யார் கூறியது?''

"இப்பெருங் கருத்தை நம் சமய குருநாதரான அப்பர் பெருமானார் தாம் தில்லையில் பெருமானை தரிசிக்க வந்த போழ்து கண்ட அனுபவ அருட் காட்சியின் மாட்சியை விளக்கும் பின்வரும் பாடலில் அழகாகக் கூறியுள்ளார்.

ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை
கன்றிய காலனைக் காலாற் கடிந்தான் அடிய வற்காச்
சென்று தொழுமின்கள் தில்லையுட்சிற் றம்பலத்து நட்டம்
என்றுவந் தாயென்னும் எம்பெரு மான்றன் திருக்குறிப்பே.

எனவே பிறவி எடுத்தவர்கள் எல்லாம் சிதம்பரம் சென்று வழிபடுங்கள். பெருமானைத் தரிசிக்கும்போது இப்பாடலை ஒரு மனப்பட்டுப் பாடி வழிபடுகிற ஆண்டவன் அருளை அறிந்து ஆனந்திக்கலாம்.

உ

முருகா

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

(192-ஆம் பக்கத் தொடர்ச்சி)

பிரமதத்தன் ''பூஜனியே! செய்ததற்குப் பதில் செய்தவன் குற்ற முள்ளவனுக மாட்டான். ஆதலால் நீ இங்கே சுகமாக அச்சமின்றி வாழ்க. போக வேண்டாம்'' என்ருன்.

பூஜனி ''மன்னவனே! பிழை செய்தவனுக்கும் அதற்கு எதிராகப் பிழை செய்தவனுக்கும் நட்பு மறுபடியும் சேராது. உலகம் நம்பிக்கையால் கட்டுப்படுகின்றது. வலிமையாலும் மிகுந்த கூர்மையான ஆயுதங்களாலுங்கூட எவர்களை வெல்ல முடியாதோ அவர்களும் நன்மொழியால் யானைகளால் யானைகள் அடக்கப்படுவதுபோல் அடக்கப்படுவார்கள்'' என்று கூறியது.

பிரமதத்தன் ''பறவையே! நாயைக்கொன்று தின்னும் சண்டாளனுக்கும் நாய்க்கும் நட்பு இருக்கின்றது. பழகுவதனுல் பகை குறைகின்றது'' என்ருன்.

பூஜனி ''அரசே! பகைமை ஐந்து விதங்களால் உண்டாகின்றது. பெண், பொன் முதலியபொருள், வாக்கு, பிறவி, குற்றம் செய்தல், ஐந்தும் பகையுண்டாவதற்குக் காரணம்.* பகைவனுயிருந்தாலும் உதவி செய்தவனை அரசன் கொல்லக்கூடாது. தீயானது கட்டைகளில் மறைந்திருப்பது போல் பகைமை உணர்ச்சி மறைந்து

---

* (1) கண்ணபிரானுக்கும் சிசுபாலனுக்கும் பகைமை பெண்ணுல் உண்டாயிற்று.

(2) பாண்டவருக்கும் கௌரவர்கட்கும் பகைமை பொருளால் உண்டாயிற்று.

(3) துரோணருக்கும் துருபதனுக்கும் பகைமை வாக்கினுல் உண்டாயிற்று.

(4) எலி பூனை முதலியவைகட்குப் பகைமைபிற ப்பினுல் உண்டாயிற்று.

(5) பூஜனிக்கும் பிரமதத்தனுக்கும் பகைமை குற்றத்தால் உண்டாயிற்று.

கொண்டிருக்கும். அதைப் பொருளாலும், இனிய மொழிகளாலும் அவிக்க முடியாது. பகைமைத் தீ உண்டானால் ஒன்றைக் கொளுத்தாமல் அவியாது. ஆகையால் நான் உன் சொல்லை நம்பி உன்னுடன் சேர்ந்திருப்பதை விரும்பவில்லை'' என்று சொல்லிற்று.

பிரமதத்தன் ''பறவையே! எல்லாக் காரியங்களும் காலத்தாலேயே நடக்கின்றன. ஆதலால் யார் எவனுக்குக் குற்றஞ் செய்தவனவான். காலத்தாலே மனிதன் பிறக்கின்றான். காலத்தாலே இறக்கின்றான். காலமே அனைத்துக்குங் காரணம். தீ விறகுகளை எரிப்பது போல் காலம் எல்லோரையும் எரிக்கின்றது. காலம் சுகதுக்கத்தை உண்டுபண்ணுகின்றது. ஆதலால் நீயும் நானும் காரணம் இல்லை. எல்லாம் காலத்தாலே நடைபெறுவதனால் உன் மீது குற்றமில்லை. நான் நடந்ததைப் பொறுத்துக் கொண்டேன். நீயும் பொறுத்துக்கொள். இங்கேயே இரு'' என்றான்.

பூஜனி ''அரசே! காலமே எல்லாவற்றும் காரணமானால் ஒருவனுக்குப் பகையுண்டாகாது. காலத்தால் நோய் உண்டாகுமானால் மருந்தும் மருத்துவரும் ஏன்? என் குழந்தையைக் கொன்ற உன் மகனை நான் துன்புறுத்திவிட்டேன். நான் புத்திரசோகத்தால் உன் மகனிடம் பாவத்தைச் செய்திருக்கின்றேன். வேதத்தை அறிந்த பெரியோர்கள் பிறப்பிறப்புக்களால் துக்கம் உண்டாகின்றது என்று கூறுகின்றார்கள். எல்லோருக்கும் உயிர்மீது ஆசையுண்டு. எல்லோருக்கும் மக்கள்மீது ஆசையுண்டு. எல்லோருக்கும் சுகத்தில் விருப்பம் உண்டு. துக்கத்தில் வெறுப்புண்டு. பொருளின் அழிவு துக்கத்தைத் தரும்; கிழத்தனம் துக்கத்தைத் தரும். வேண்டாத இடத்தில் வசிப்பதும், விரும்பிய பொருளை இழப்பதும் துக்கத்தைத் தரும். புதல்வனை இழந்ததனால் உண்டாகிய துக்கம் நூறு ஆண்டுகள் சென்றாலும் மறையாது. உள்ளத்தை உறுத்திக் கொண்டேயிருக்கும். அதனால் உனக்கும் எனக்குஞ் சாந்தியேற்படாது. உடைந்த மண் பானையைப் போல் இனி உனக்கும் எனக்கும் நட்பு ஏற்படாது.

முன்னொரு சமயம் பிரகலாதரிடம் சுக்கிராசாரியர் கூறிய இதனைக் கேள். ''உண்மையோ பொய்யோ பகைவனுடைய வசனத்தில் நம்பிக்கை வைப்பவன், காய்ந்த புற்களால் மறைந்து தெரியாமலிருக்கின்ற பள்ளத்திலுள்ள தேனை நம்பி இறங்குபவனைப்போல் துன்பமடைவான். பகையுணர்ச்சி பத்து யுகமானாலும் போகாது. அரசர்கள் பகைமையை மறைத்து இன்னுரை கூறுவார்கள். பிறகு நிறைகுடத்தைக் கல்லில் உடைப்பதுபோல் பகைவனைக் கொல்லுவார்கள். ஆதலால் ஒருவனுக்குக் கேடு செய்தபின் அவனிடம் எப்போதும் நம்பிக்கை வைக்கலாகாது'' என்று கூறியது.

பிரமதத்தன் ''நம்பிக்கையில்லாமல் பொருளைச் சேர்க்க முடியாது. ஒன்றையுஞ் செய்யமுடியாது. எப்போதும் பயந்துகொண்டே வாழ்பவன் பிணத்துக்குச் சமானமானவன்'' என்றான்.

பூஜனி ''வேந்தே! காலில் புண்ணுடையவன் ஓடுவானானால் அவனுடைய கால்கள் துன்பமடையும்: புண்ணுள்ள கண்களால் காற்றை எதிர்த்துப் பார்க்கின்றவன் துன்பமடைவான். மழையை அறியாமல் வயலை உழுது விதைத்தவன் வருத்த மடைவான். எவன் கசப்போ துவர்ப்போ இனிப்போ தன் உடலுக்கு ஏற்ற உணவை யுண்ணுகின்றவன் நெடுங்காலம் வாழ்வான். அறியாமையால் அபத்தியமான உணவையுண்பவன் மரணமடைவான். முயற்சியுடையவன் உயர்ச்சியடைவான். கல்வி தூய்மை ஆற்றல் இவைகள் சிறந்தவை. இவைகளால் புலவர்கள் வாழ்கின்றார்கள். அறிவுள்ளவன் எல்லாவிடத்தும் மகிழ்ச்சியுடன் இருப்பான். பிறருக்கு அச்சத்தை யுண்டுபண்ண மாட்டான். தானும் அச்சப்பட மாட்டான். அறிவுள்ளவன் சிறிய பொருளையும் பெரிதாக வளர்த்துக் கொள்ளுவான். சிலர் அறிவின்மையால் வீடு வயல் நண்பர்கள் இவைகளை நம்முடையது என்று எண்ணி இன்னலுறுகின்றார்கள். அவமானமுள்ள இடத்தையும் பஞ்சமுள்ள இடத்தையும் விட்டு விலகி விடவேண்டும். ஆதலால் வேறு இடத்துக்குப் போகின்றேன். இங்கு வாழ நான் விரும்பவில்லை. உன் மகனை நான் இடர்ப்படுத்தி விட்டேன். கெட்ட மனைவி, கெட்டமகன், கெட்ட அரசன், கெட்ட நண்பன், கெட்டசம்பந்தம், கெட்ட தேசம் ஆகிய இவைகளை தூரத்தில் விலக்க வேண்டும். கெட்ட நண்பனிடத்தில் நம்பிக்கை யிராது; கெட்ட மனைவியிடம் மகிழ்ச்சி யிராது; கெட்ட தேசத்தில் சுகம் இராது; வாழ்வு இராது; கெட்டமகனிடம் அன்பு இராது. கெட்ட சம்பந்தத்தால் பொருள் அழியும். அவமானமும் உண்டாகும். எவள் அன்பாகப் பேசுவாளோ அவள் மனைவி; எவனிடத்தில் சுகமுண்டாகுமோ அவன் மகன்; எவனிடத்தில் நம்பிக்கையிருக்குமோ அவன் நண்பன். எவ்விடத்தில் வாழ்வு இருக்குமோ அது தேசம்: எவன் குடிகளைக் காப்பாற்றுகின்றானோ அவன் அரசன். குணமுள்ள அரசன் ஆட்சிபுரியும் நாட்டில், மனைவி தேசம் மித்திரர் புத்திரர் உறவினர் ஆகிய அனைவரும் சுகமாக இருப்பார்கள். அறநெறியறியாத அரசனுடைய நாட்டில் குடிகள் நாசமடைவார்கள். அரசன் அறம் பொருள் இன்பம் என்ற மூன்றுக்கும் மூலமாவான். ஆறில் ஒரு பங்குபெற்று நன்றாகக் காப்பாற்றாதவன் அரசன் என்ற பேருள்ள திருடனாவான். அரசன் தந்தையும் தாயும் குருவும் காவலனும் அக்கினியும் குபேரனும் இயமனும் ஆவான்; இந்த ஏழு குணங்களையும் மனு கூறியிருக்கின்றார்.

(1) குடிகளிடம் அன்பு பாராட்டுவதனல் அரசன் தந்தையாகின்முன்.

(2) நன்மையைச் சிந்தித்துக் காப்பதனல் தாயாகின்முன்.

(3) அறநெறிகளை உபதேசிப்பதனல் குருவாகின்முன்.

(4) துன்பத்தையகற்றி இன்பத்தைச் செய்து பாதுகாப்பதனல் காவலன் ஆகின்முன்.

(5) பகைவர்களை அழிப்பதனல் நெருப்பு ஆகின்முன்.

(6) வேண்டியவர்களுக்குப் பொருள் தந்து, பொருளை வளர்ப்பதனல் குபேரன் ஆகின்முன்.

(7) நன்மை செய்யாதவர்களை நன்கு அடக்குவதனல் இயமன் ஆகின்முன்.

நல்ல அரசனுடைய நாடு குறைவடையாது; நீதி நெறி தவருத மன்னன் மண்ணிலும் விண்ணிலும் சுகமடைவான்" என்று இவ்வாறு கூறிவிட்டுப் பிரமதத்தனிடம் விடை பெற்றுக்கொண்டு அந்தப் பறவை தனக்கு விருப்பமான இடத்தை நாடிப் பறந்து சென்றது. வேறு என்ன என்பால் கேட்க விரும்புகின்முய்" என்று பீஷ்மர் கூறினர்.

## பாரத்துவாஜருடைய அறவுரை

தருமர் யுகமாறுபாட்டால் அறம் குன்றி திருடர்கள் மலிந்து விட்டால், அத்தகைய ஆபத்துக் காலத்தில் அரசன் எவ்விதம் நடந்து கொள்ளவேண்டும்? என்று வினவினர்.

பீஷ்மர், "பாரத! இதுபற்றி முன்னெரு காலத்தில் சத்ருந்தபன் என்ற மன்னவனுக்கும் பாரத்துவாஜருக்கும் நடந்த உரையாடலை உனக்கு உரைக்கின்றேன்; கேள்.

சௌவீர தேயத்து மன்னனுகிய சத்ருந்தபன் பாரத்துவாஜரிடம் போய் "முனிபுங்கவரே! அடைய முடியாத ஒரு பொருளை அடைவது எவ்விதம்? அடைந்த பொருளை வளரச் செய்வது எவ்விதம்? வளர்ந்த பொருளைக் காப்பது எவ்விதம்? பாதுகாத்த பொருளைப் பயன் படுத்துவது எவ்விதம்?" என்று கேட்டான். அறிவிற் சிறந்த பாரத்துவாஜர் பொருளடங்கிய இந்த உத்தம வசனங்களை உபதேசித்தார்.

"அரசன் தண்டிப்பதில் கண்ணுங்கருத்துமாயிருக்க வேண்டும். பிறருக்குத் தன் குறைபாடுகளைக் காட்டாமலும் பிறருடைய குறை

களைக் கண்டு தொடர்ந்து செல்லுகின்றவனுயிருக்க வேண்டும். தண்டத்தைச் செய்யும் அரசனிடம் அனைவரும் அடங்கி நடப் பார்கள்.

அரசனுக்கு சாம தான பேத தண்டம், என்ற நான்கு உபாயங் களில் தண்டோபாயந்தான் முக்கியம். நாட்டில் மூலம் அழிந்து விட்டால் அதை அடுத்துப் பிழைப்போர் அனைவரும் அழிவார்கள். பெரிய மரத்தின் வேர் அறுபட்டால் கிளைகள் எவ்விதம் இருக்கும்? பகைவனுடைய ஆணிவேரை முதலில் அறுக்கவேண்டும். பின்னர் அவனுக்கு உதவியாயிருப்பவர்களை அழிக்கவேண்டும். ஆபத்துக் காலத்தில் அரசன் நல்ல ஆலோசனை செய்யவேண்டும்; திறமை யோடு போர் புரிய வேண்டும். திறமையாகப் பின் வாங்கவும் வேண்டும். தயங்கக் கூடாது. வாக்கில் வணக்கமிருக்க வேண்டும். மனத்தைக் கத்திபோல் வைத்துக் கொள்ளவேண்டும். ஆசைக்கும் கோபத்துக்கும் வயப்படாமல் மென்மையாகவும் நன்மையாகவும் பேசவேண்டும்.

பகைவனுடன் கூடி சமாதானஞ் செய்து கொண்டு பின் நம் பிக்கை வைக்காமல் இருக்க வேண்டும். திறமையுள்ளவன் காரி யத்தை முடித்துக் கொண்டு அதிலிருந்து விலகவேண்டும். பகைவ னிடம் நண்பனைப் போல் பழகினாலும், வீட்டிலுள்ள பாம்புடன் பழகுவது போல் பயந்தே வாழவேண்டும். செல்வத்தை விரும்பு பவன் வணங்கியும் கண்ணீர் வடித்தும் காரியத்தைச் சாதிக்க வேண்டும். காரியம் முடியும் வரை பகைவனைத் தோளில் சுமக்க வேண்டும்; முடிந்தபின் மண் குடத்தைக் கல்லில் உடைப்பது போல் அவனை அழிக்க வேண்டும். ஒரு முகூர்த்த நேரமானாலும் கருங் காலிமரத்தின் தீயைப்போல் ஒளி விட்டு எரிய வேண்டும். உமியி லுள்ள தீயைப்போல் ஒளியின்றி நெடுங்காலம் புகைந்து கொண் டிருக்கக் கூடாது. சிலர் காரியம் முடிந்த பின் நம்மை அவமதிப் பார்கள். ஆதலால் அவர்களது காரியத்தை முழுதும் முடிக்காமல் மிச்சமுள்ளதாகவே வைக்கவேண்டும்.

* குயில், பன்றி, மேருமலை, ஒன்றுமில்லாத வீடு, பாம்பு, அன் புள்ள நண்பன், இவைகளைப் போல் அரசன் ஒழுக வேண்டும்.

---

*குயில்:—தான் காப்பாற்ற வேண்டிய முட்டையைக் காக்கை யின் கூட்டில் இட்டு அதைக்காக்குமாறு செய்யும். அது போல் அரசன் பயிர் வாணிபம் வழி வனம் முதலிய தன் பொருள்களைப் பிறரைக் கொண்டு காப்பாற்றுமாறு செய்யவேண்டும்.

பன்றி:—தான் உண்ணும் கோரைப் புல்லை வேருடன் பறித்து உண்ணும். அதுபோல் அரசன் பகைவரை வேருடன் களைய வேண்டும்.

அரசன் விடா முயற்சியுடன் தன் பகைவனுடைய வீட்டிற்குப் போகவேண்டும். பகைவனுக்கு நலம் இல்லாதிருந்தாலும் நலம் விசாரிக்க வேண்டும்.

சோம்பேறிகளும், தைரியமுள்ளவர்களும், அதிக கௌரவம் கொண்டாடுகின்றவர்களும், விட்டுவிட்டு முயற்சி செய்பவர்களும் செல்வத்தை அடையமாட்டார்கள். ஆமை தன் அங்கங்களை மறைத்துக்கொள்வதுபோல் அரசன் தன் குறைபாடுகளை மறைத்துக் கொள்ளவேண்டும். கொக்கைப் போல் ஒரே நினைவாக இருந்து காரியங்களைச் சாதிக்க வேண்டும். சிம்மத்தைப்போல் ஆற்றலை வெளியிட வேண்டும். ஓநாயைப் போல் பதுங்கி, அம்பு போல் திரும்பாமல் பாய வேண்டும். சூது, வேட்டை, பெண்கள், பாட்டு முதலியவைகளை அளவாக அனுபவிக்க வேண்டும். மிதமிஞ்சினால் தீமைபயக்கும். குருடனாயிருக்கவேண்டிய சமயத்தில் குருடனாயிருக்க வேண்டும். செவிடனாயிருக்க வேண்டிய சமயத்தில் செவிடனாயிருக்க வேண்டும். காலம் அறிந்து இடம் அறிந்து தனது ஆற்றலை வெளிப்படுத்த வேண்டும். தன்வலியையும், பகைவனுடைய வலியையும், இருவருக்குமுள்ள துணை வலியையும் அறிய வேண்டும். எதிரியைத் தண்டத்தால் அடக்காத அரசன் *அச்வதரியென்ற விலங்கு தன் கருவினால் அழிவது போல் அழிந்து போவான்.

நன்றாகப் பூவுள்ளதாயிருந்து கனியில்லாததாயிருக்க வேண்டும்: கனியுள்ளதாயிருந்து ஏறத்தகாததாயிருக்க வேண்டும்.

பழுக்காமல் பழுத்தது போல் இருக்க வேண்டும். ஒருவனுக்கும் உதிராமல் இருக்க வேண்டும். வருகின்ற துன்பத்தைத் தெரிந்து கொள்ளவேண்டும். வந்த துன்பத்தை யகற்ற வேண்டும். கிடைத்ததை நழுவவிடுவதும், கிடைக்காததை விரும்புவதும் நீதியன்று. பகைவனுடன் பழகுபவன் மரத்தின் நுனியில் உறங்குபவனுக்கு

---

**மேருமலை:**—அசைவற்று இருந்து தன்னைத் தாண்ட முடியாததாக இருக்கும். அதுபோல் அரசன் உறுதியுடன் இருந்து பகைவரால் அடக்க முடியாமல் விளங்க வேண்டும்.

**ஒன்றுமில்லாத வீடு:**—ஒன்றுமில்லாத வீடு பல பொருள்களை விரும்பும். அதுபோல் அரசன் எல்லாப் பொருள்களையும் விரும்ப வேண்டும்.

**பாம்பு:**—நெருங்க முடியாது சினத்துடன் இருக்கும். அதுபோல் அரசன் பிறரால் எளிதில் அணுக முடியாதவனாயிருக்க வேண்டும்.

**நண்பன்.**—தன்னைச் சேர்ந்தவர்களின் நலத்தை விரும்புவான்; அதுபோல் அரசன் குடிகளின் நலத்தை விரும்ப வேண்டும்.

*அச்வதரி—என்ற விலங்கின் கரு தாயின் வயிற்றைப் பிளந்து கொண்டு வரும்.

நிகராவான். கள்வர்களைக் கண்டு பிடித்து அடக்கவேண்டும். நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கை கூடாது; நம்பிக்கையுள்ள இடத்திலும் அதிக நம்பிக்கை வைக்கக் கூடாது; நம்பிக்கையால் பயமுண்டாகும். சோதனை செய்யாமல் யாரையும் நம்பக்கூடாது. பிறப்பினுல் பகைவனும் இல்லை; நண்பனும் இல்லை; செயல்களால் தான் பகையும் நட்பும் ஏற்படுகின்றன. பகைவன் எளிமையாக இனிக்கப் பேசினுலும் அவனை விடக்கூடாது. அவனிடம் இரக்கங் காட்டக் கூடாது. அழிக்கவேண்டும். அடிக்கப் போகின்றபோது இனிமையாகப் பேசவேண்டும்; அடித்த பின்னும் அதிக அன்பாகப் பேச வேண்டும். இனிய சொற்களாலும் வெகுமதியாலும் பொறுமையாலும் பிறரைத் தன் வசமாக்கிக் கொள்ளவேண்டும். பயன் இல்லாதபடி ஒருவனைப் பகைத்துக் கொள்ளக்கூடாது. கைகளால் ஆற்றைக் கடக்கக் கூடாது. மாட்டுக் கொம்பைத் தின்றுல் பல் உடையும். கடனின் மிச்சமும், தீயின் மிச்சமும், பகைவனின் மிச்சமும் இருக்க விடக்கூடாது. மிச்சமாக விட்டால் அவை வளர்ந்து துன்பத்தைச் செய்யும். கழுகைப்போல் நீண்ட பார்வையும், கொக்கைப்போல் அசைவற்ற தன்மையும், நாய்போல் எச்சரிக்கையும், காக்கைபோல் பிறருடைய இங்கிதமறியும் தன்மையும், பாம்புபோல் சென்ற வழியைப் பிறர் அறியாமல் செய்தலும், உடையவனுக இருக்க வேண்டும்.

சூரனைப் பணிவினுலும், பயமுள்ளவனைப் பேதத்திலும், லோபியைப் பொருளாலும், சமமானவனைப் போரினுலும் அடக்க வேண்டும்.

அரசன் கருணையோடு இருந்தால் அவமதிப்பார்கள், கொடுமையாக இருந்தால் அஞ்சுவார்கள். ஆதலால் அதிகக் கருணையும் மிதமிஞ்சிய கொடுமையும் இன்றி காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்றவாறு இருக்க வேண்டும். அறிவுள்ளவனிடம் பகைக்கக் கூடாது. முடியாத காரியத்தில் முயலக் கூடாது. இவ்வாறு அரசன் ஆபத்துக் காலத்தில் நடந்துகொள்ளவேண்டும்'' என்று பாரத்துவாசகர் சத்ருந்தபனுக்கு உரைத்தருளினுர். அரசன் அதுகேட்டு அதன்படி நடந்து நன்மை யடைந்தான் என்று பீஷ்மர் கூறினுர்.

தருமர் ''அறிவுமயமானதே! பஞ்சமும் துயரமும் உண்டாகி உலகம் நிலை குலைந்துள்ள காலத்தில் எப்படி நடக்க வேண்டும்?'' என்று கேட்டார்.

(தொடரும்)

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம். இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

**கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா**

| | | | |
|---|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. | 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. | 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

---



---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினாலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்